# நன்றி

---

இல்லை—முடியாது — கூடாது தேவையில்லை என்ற சொற்களை எனது மதிப்பிற்குரிய அண்ணா அவர்களிடமிருந்து நான் என்றைக்குமே கேட்டதில்லை.

அண்ணா அவர்களின் அலுவலகத்தில் (திராவிட நாடு) கடந்த பதினைந்து ஆண்டுகளாகப் பணியாற்றி வரும் நான் எந்த நேரத்திலும் இந்தச் சொற்களை அவர் கூறக் கேட்டதில்லை.

"ஆகட்டும் பார்க்கலாம்" என்ற தட்டிக் கழிக்கும் போக்கு அண்ணா அவர்களிடம் கிடையாது.

"ஆகட்டும், செய்" என்பதுதான் அண்ணா அவர்களின் நோக்கமும் விருப்பமுமாகும்.

பொது நலனுக்குப் புறம்பான—தீங்கு பயக்கக் கூடியவை தவிர, எந்த நல்ல

செயலுக்கும் அண்ணா அவர்கள் மறுப்புரை கூறுவது கிடையாது.

அந்த முறையில்தான் அண்ணா அவர்கள் தீட்டிய "கம்ப ரசம்" என்ற நூலை வெளியிடும் உரிமையையும் எனக்கு மனமுவந்து அளித்துள்ளார்கள்.

எனவே, எனது நன்றியறிதலையும் வணக்கத்தையும் அண்ணா அவர்களுக்குச் செலுத்துகின்றேன்.

வணக்கம்,

தொண்டன்-**மாணிக்கம்,**
"திராவிட நாடு"
அலுவலகம்,
**காஞ்சிபுரம்.**
*3—7—61*

தேவமாக் காதையைத் தேனினுமினிய தமிழில், பாடி அருளினன் கம்பன்-கவிச்சக்கரவர்த்தி. அவர் தம் அருங் கவிதையிலே காணக் கிடைக்கும் ரசத்தைப் பருகிடத்தெரியாத பதர்கள் செவிச்சுவை உணரா மாக்கள், குறைகூறித் திரிகின்றன.

கதை, நம்பொணுததாம்—தள்ளி விடட்டும்! காகுத்தன் அரி அவதாரம் அல்லவாம்—கரம் இருபதும் சிரம் பத்தும் கொண்டிருந்த இலங்கை வேந்தனும் இராவணன் அரக்கன் அல்லவாம்! தொலையட்டும். கவிதையில் உள்ள சுவை—காவியத்தில் ததும்பும் கலாரசம், கம்பன் தீட்டும் ஓவியத்தின் உயர்வு-அவைதமைக் காணும்போது உள்ளத்துக்குக் கிடைக்கும் உற்சாக வெள்ளம்—அடா அடா! எத்துணை இன்பம், எத்தகைய இன்பம்! இதனை ரசித்திடத் தெரியவில்லையே, இதுகளுக்கு என்று, நம்மைக் காய்ந்தனர், காவியச் சுவை பருகிக் களிப்புற்றிருந்த கற்றோர்.

மற்றையோர் இது 'புண்ய கதை'-படித்தாலும் படிக்கப் பக்கம் நின்று கேட்டாலும் பரமபதம் கிடைக்கும் என்றனர்.

காலக் கணைகளுக்கு அஞ்சிய சிலரோ, கதை கிடக்கட்டுமய்யா, நம்பினல் நம்பு, தள்ளிவிட்டாலும் சரி—கலை—கலை—அந்தக் காவியத்திலே பூத்துக் குலுங்கி, மணம் பரப்பி, மகிழ்வளிக்கும் கலை இருக்கிறதே, கருத்தற்றவனே! அதை இழந்துவிடுவதா! இன்பபுரிக்கு அழைப்பு—மறுத்துவிடுவதா!-என்று உருக்கமாகக் கூறினர்.

ஐயன்மீர்! நாம் புண்ய கதைகளை அறவே தள்ளிவிடத்தான் வேண்டும் என்று பேசிடும் புல்லரும் அல்ல.

கவிதையின் சுவையை ரசித்தல் ஆகாது என்று கூறிடும் மரக்கட்டைகளும் அல்ல.

அதது அததன் இடத்தில் அமைந்திருத்தல் வேண்டும் என்கிறோம்.

பூவையரின் கூந்தலிலிருந்து துவக்கி, ஒவ்வோர் இடமாகப் படமெடுத்துக் காட்டிடும் பாகுமொழிப் பாட்டானாலும் சரி—ஐயனின் அருங்குணங்களை ஆதியோடந்தமாக எடுத்துரைக்கும் அருங் கவிதைகளானாலும் சரி-இருக்கட்டும்-சிறப்புரைகள் பெற்றுத் திகழட்டும்—மறுப்பாரில்லை.

இரண்டையும் ஒன்றாக்கி மனதுக்குக் குழப்பத்தையும், மாதேவனின் புகழுக்கு இழுக்கையும் உண்டாக்கவேண்டாம்.

பூஜா மாடத்தில், புண்ய கதையை வைத்திடுவீர்! பூவையர்தம் பூங்குழல் முதற்கொண்டு பாவைப்பேர் அல்குல்வரை சித்திரநடையில் தீட்டப்படும் பாடல்களை, அத்துடன்--இணைத்து, பூஜா மாடத்தில் வைத்திட வேண்டாம்; பூஜை பலன் தராது! என்று கூறினோம்.

ஏடா, மூடா! அங்ஙனம் கூறுதுமேயாமாகில் எமது கம்பன், காமக் கலைஞனோ!-என்று சினந்தெழுந்து கேட்டனர் சிலர்.

நீ எழுதிடும், 'ரோமாபுரி ராணிகள்'-காமக்

களஞ்சியம் என்பதை நாங்களறிவோமே என்று கேலிக் குரலில் பேசினர் சிலர்.

அவர்களிலே சிலர், பிறகு 'ஆயிரத்தெட்டு இரவுகளையும்' அந்தரங்க விஷயங்களின் சுவைகூட விளங்குமளவுக்குத் தீட்டிக் காட்டினர் — தீட்டியும் வருகின்றனர்.

இலக்கியத்தில், இன்மொழிப் பாவையரின் இயல்பு குறித்தே ஏதும் இருத்தலாகாது என்று கூறும், வரட்டு வேதாந்தமல்ல நாம் வலியுறுத்துவது.

நாற்றப் படுகுழி-நீர்மேற் குமிழி-என்று விரக்தி வாசகம் கூறிடுவதுதான் இலக்கியம் என்றும் இயம்பவில்லை.

மாதர் தம் கெண்டை விழியையும் தண்டை ஒலியையும், இடை அசைவையும், இன்மொழிச் சுவையையும், வெறுத்திடும் வரட்டுக்குணம் கொண்டிடச் சொல்லி யாரையும் வலியுறுத்தவில்லை—அதே போது, ஆண்டவனின் அருளைப் பெறுவதற்கான 'தூய காதை' என்று கூறிக்கொண்டு, அதிலே துடியிடை, கொவ்வை அதரம், கோலமயிலின் சாயல், என்பவைகளோடு நிறுத்திக்கொள்ளக்கூட மனமின்றி, மேலிடம் மறைவிடம் ஆகியவைபற்றி, லீலா விநோத விளக்க ஏட்டாசிரியர்களும் சொல்லக் கூசும் நுட்பங்களைக் கொட்டிக் குழைத்து அளிப்பது, அழகாகாது என்றோம்.

**மாதரின் இரு விழிகள் மதுக்குடங்கள்!**
**அவர்தம் இடை, மின்னல்!**

நடை, அன்னம்!
ஆடலில் மயில்!
பாடலில் குயில்!

என்று சுவைபடக் கூறிடும் கவிதைகளைத் தீயிட்டுப் பொசுக்கிடவேண்டும் என்பதல்ல, நாம் கூறுவது. அளவும் வைத்துக்கொள்ளாது, அனுமன் இடம் சீதா பிராட்டியாரின் அங்க அடையாளம் பற்றி இராமன் கூறுகிற கட்டமானாலும், வாலி இறந்துபட்டபோது அவன்மீது விழுந்து அழுத தாரையின் மேலிட வர்ணனையாலும், கம்பர், காமச் சுவைக்கு அளவு கடந்த அக்கரையும் திறமையும் காட்டிக், காகுத்தன் பெருமைகூடக் கடுகளவு ஆகி விடும்படி செய்கிறார், என்று கூறினோம்—ஏழை பேச்சு அம்பலமேறாது என்பதறிந்து கம்பனின் கவிதைகளிலே உள்ள அந்த 'ரசம்' எப்படி இருக்கிறது என்பதை எடுத்துக் காட்டினோம்.

கம்பனின் காவியம்—அதற்குக் கயவர்கள் அல்ல, கலா விற்பன்னர்கள் அளித்த பொருள்—இவைகளைக் கொண்டு, தொகுத்தது கம்பரசம்.

மறுப்புரைகள் பல வெளியிடப்பட்டன!

கம்பரசத்துக்குச் சாவுமணி !
கம்பரசத்துக்கு மண்டையிலடி !
அண்ணாத்துரைக்கு ஆப்பு !

இப்படித் தலைப்புகள் கொண்ட மறுப்பேடுகள் கிளம்பின—தலைப்புகளே, அவைகளைத் தீட்டினோர், எதன் வயப்பட்டிருந்தனர், கோபத்தின் பிடியிலா, அல்லது ஆராய்ச்சியிலா என்பதை விளக்கிவிட்டன.

உனக்கென்ன தெரியும்?
நீ யார், இதைக் கூற?
நீ மட்டும், மகா யோக்யனே?

என்று கேட்கப்பட்டது சிலரால் — இவர்கள் கவனிக்கப்படவேண்டியவர்களல்ல, ஏனெனில் இவர்கள் கடைவீதிச் சிறுர் போக்கில், கண்டித்து வாயடக்கலாம் என்ற நோக்குடன் கிளம்பினவர்கள்!

வேறு சிலர், அல்குல் என்பதற்கு நான் கொண்ட பொருள் தவறு என்று வாதிட்டனர்.

இவர்கள் அனுதாபத்துடன் கவனிக்கப்பட வேண்டியவர்கள், ஏனெனில் இவர்களுக்கு உண்மையில் கம்பர், தமது கவிதைகளில் காட்டிய 'ரசம்' சிறிதளவு அருவருப்புத் தந்திருக்கிறது — எனவே அவர்கள், வெண்குட்டம் கொண்டவன், இது குட்டமல்ல, சாதாரணச் சரும வியாதிகூட அல்ல-இது அழகுத்தேமல், என்று கூறித் தனக்குத் தானே திருப்தி தேடிக்கொள்வதுபோல, அல்குல் என்ருல் இடை என்று பொருள், கூறினர்.

கம்பரின் பாடலில், இடையும் இதுவும் வேறு வேருகப் பயன்படுத்தப்பட்டிருக்கும் இடங்கள் ஏராளம்.

எனவே, இவர் தம் கூற்று, சரியன்று.

நிற்க, இன்னெருவர், ஆற்றில் ஓரிடத்தில் அணங்குகள் செல்ல, அவர்கள் அணிந்திருந்த தூசு (ஆடை) நீர்த்திவலையால் நனைந்திட—அல்குல் புறத்துத் தெரிந்திட—ஆடவர் சிரித்தனர், என்று உள்ள

கவிதையைக் காட்டியது கண்டு கவலைப்பட்டுக், கவிதை சரி, காட்சியும் அப்படித்தான் கவிதை மூலம், ஆனால் அவன் கூறினது போல. தெரிந்தது மறைவிடமல்ல, பின்னிடம் என்று வாதிட்டிருக்கிறார்.

உண்மையாகவே எனக்கு அவரிடம் பரிதாபந் தான்.

பாருங்கள், எவ்வளவு சிரமப்பட்டிருக்கிறார், கவிதையைச் சிறிதாவது நாகரிகமாக்கிக் காட்டுவோம், என்று.

கம்பருக்கு, இப்படிப்பட்ட ஆதரவாளர் இருக்கிறார்கள்-ஆனால் அவர்களையும் என்போன்றோரையும், முன்னிடமா, பின்னிடமா என்று, வீணான, விபரீதமான விவாதத்தில் இறங்கிச் செய்யும் விதமாக, ஏன் தான் கம்பர், இக்கவிதை தீட்டவேண்டும்? கைவண்ணம், கால்வண்ணம் காட்டிக்காகுத்தன் பெருமையைக், கடவுட் தன்மையை விளக்கியதோடு நிறுத்திக் கொள்ளாமல், அயோத்தி ஆடவரின் 'கண் வண்ணம்' காட்டி, அக்கண்கள் சென்ற இடமெல்லாம், இவருடைய கவிதா சக்தியைச் செலுத்தி, பூஜாமடத்துப் புனித ஏட்டை, தங்கபஸ்பப் பெட்டிக்கு அருகில் கொண்டுவந்துவிட்டாரே! அதனால் அல்லவா இன்று ஒரு பதத்துக்கு, வேறு பொருள் தர, புராணப் புலவர்கள் படாதபாடு படவேண்டியிருக்கிறது. அதை எண்ணித்தான் பரிதாபப்படுகிறேன்.

கம்பரைப் பாதுகாத்திடுவது, கன்னித் தமிழை, காவியச் சிறப்பை, கலையைக் காப்பாற்றுவதாகும்

என்று அவர்கள், பாபம், எண்ணிக்கொண்டு, மெத்தக் கஷ்டப்படுகிறார்கள்.

கம்பர், இவ்விதம் ஒரு விவாத நிலை வளரும் என்று எதிர்பார்த்திருக்க முடியாது.

காமக்களியாட்டம், அரச போகங்களில் ஒன்றாகவும், மாளிகை விருந்துகளில் மதுரமானதாகவும் கருதப்பட்டுவந்த காலத்துக் கவி அவர்.

அவருக்குத், தொழிலாளியின் அவதிபற்றியோ, ஏழையின் இதயக் குமுறல் குறித்தோ கவலை எழ வேண்டிய நிலை இல்லை.

கவிஞர்களிலேயே, மிக மிகச் செல்வ நிலையும், செல்வர்களின் தோழமையும் கொண்டவர் கம்பர்.

கவி அரசர்!

எனவே, அவர் சூழ்நிலை மூலம் கிடைக்கும் எண்ணங்களைத் தானே கவிதையாக்குவார் — தமிழ் அவரிடம் தவழ்ந்தது; எனவே, கவிதைகளை எழிலோவிய மாக்கினார்.

படமெடுக்கும் கருவி, முதல்தரமானது.

படமெடுக்கும் திறன், மிகுதியும் பெற்றவர்.

பறந்திடும் கழுகு, பாடிடும் கிள்ளை, ஓடிடும் அருவி, உயர்ந்திடும் மலை, தாமரை பூத்த குளம். வேழம் திரியும் காடு, வேங்கைக்குப் பயந்தோடும் புள்ளிமான், மழலையில் மகிழும் தாய்—இப்படி எந்தக் காட்சியைப் படமாக்கினாலும், அழகாகத்தானே அமையும்.

நல்ல காமிரா (படமெடுக்கும் கருவி) தேர்ச்சி பெற்ற படப்பிடிப்பாளன்.

ஆனால், எடுத்த படங்கள், யாவை?

அது தான் நாம் கேட்டது!

அயோத்தியின் அமைப்புப் பற்றிக் கம்பர் அழகு நடையில் எடுத்துரைக்கிறார்.

கவனமிருக்கட்டும், இதிலே காதல், கடிமணம், எனும் கட்டங்கள் ஏதும் கிளம்ப வேண்டிய நிலைமை இல்லை.

அயோத்திக்கு அமைந்திருந்த அகழியைக் காட்ட விரும்புகிறார் கம்பர் — அப்போதே அவர் எண்ணம் எங்கே செல்கிறது என்கிறீர்கள்.

மற்ற மற்றப் புலவர்கள், அகழியின் ஆழத்தை விளக்குவர்: அதை அமைத்த காவலரின் ஆற்றலை விளக்குவர்.

கம்பர் இவைகளோடு திருப்தி அடையவில்லை— தன் ரசிகர்கள் அகழியை எல்லாக் கலைவாணரையும் போலத் தாமும் சித்தரித்துக் காட்டினால் திருப்தி அடையமாட்டார்கள் என்று எண்ணுகிறார். வெறும் அகழியை அவர்கள் கண்டு களித்திடமாட்டார்கள் என்று எண்ணி, அவர்களுக்கு மிகவும் பிடித்தமாக இருக்கும் என்ற நம்பிக்கையில், களிப்புடன் அகழிக்கு உவமை கூறுகிறார்.

**சாமான்யமான அகழி அல்ல**
**ஆழமானது !**
**யாரும் எளிதிலே அதனிடம் அண்ட முடியாது**

எப்படி எனில்,

கன்னியர் அல்குல் தடமென யார்க்கும்
படிவு அரு காப்பினதாகி

கன்னிப் பெண்களின் மறைவிடம் எங்ஙனம் கட்டுக்காவல் இருப்பதால், யாருக்கும் அண்ட முடியாததாக இருக்கிறதோ, அது போல! எப்படி, படப்பிடிப்பு, எதைப்பிடித்துக் காட்டுகிறார், எதற்கு எது உவமை.

கம்பன், இனித்தான் கதைக்கே வரப்போகிறார்.

கருவிலிருக்கிறார் இராமபிரான்—தசரதனையே காட்டவில்லை; அயோத்திக்குள் நுழைகிறார், ரசிகர்களை அழைத்துக்கொண்டு—பாலகாண்டம், நகரப் படலம்—இதில் கம்பரசம், அகழி வந்தது. அல்குல் தெரிகிறது, அத்துடன், கன்னியரின் இடம் கட்டுக் காவல் உடையது. எவரும் அண்ட முடியாதது என்ற உலகானுபவ உபதேசம், ஏனோ?

கம்பராமாயணம் எனும் காவியத்தின் மூலம், 'புண்யம்' பெறும் வழியைக் காட்டுவேன் என்று முன்னுரை கூறி விட்டு, நேரே, நம்மை அகழிக்கு அழைத்துச் சென்று அதைக்காட்டி, எப்படி அகழி! எப்படி இருக்கிறது? இதுபோல் இருக்கிறதல்லவா? என்று கேட்டுக், களிப்பளிக்க முயல்கிறார். உண்மையில் அகழி பற்றிய கவிதையைப் படிக்கும் போதே கவிதரும் உவமை குறித்து எண்ணத் தொடங்கிடும், ரசிகர்களுக்கு நான் குறை கூறும்போது, கோபமாகத் தானே தெரியும்.

என்ன ஐயா! இப்படி விறைக்க விறைக்கப் பார்க்கிறீர் என்று கேட்டு விடுங்கள் ஏதோ ஓர் பெண்ணுருவை, யாரும் அறியாமல் பார்ப்பதாக எண்ணிக்கொண்டு, விழுங்கி விடுவது போலப் பார்க்கும் பேர்வழியை! சீறி விழுவார்! சிச்சீ; உன் வேலையைப் பார்த்துக்கொண்டுபோ! நான் அவளையா பார்த்துக்கொண்டிருந்தேன். அவள் கட்டியிருந்த சேலே, நூலா, பட்டா என்று கவனித்தேன்-என்று கூறிக் கோபிப்பார். கம்பரசத்துடன் காட்சிதரும் அந்த அகழியைக்கண்டு அகமகிழ்வோருக்கும் அது போலத்தானே, ஐயன் மீர்! நீவிர், அரியின் அவதாரமாம் இராமபிரானுடைய அருங்காதையை அறிய விரும்புகிறீரா, அகழிக்கும் அதன் உவமைக்கும் மனதைப் பறிகொடுத்து விடப்போகிறீரா, என்று கேட்கும்போது, கடுங்கோபம் பிறக்கிறது! சகஜம்!!

அல்குல் என்றது இடை என்று வாதாடலாமா என்று துடியாய்த் துடிக்கும் பாராயணக்காரர், தெரிகிறர்.

வேண்டாமய்யா, வேண்டாம் வீண்வேலே! இடை உண்டோ இல்லேயோ என்று கூறத்தகுவது —அகழி அங்ஙனமன்று! மேலும் கம்பர், அகழியின் ஆழத்தைக் காட்டிவிட்டு, அகழியைக் கடத்தலரிது என்று கூறத்தொடங்கி, உவமை கூறுகிறர்! முன்னிடமல்ல —நிச்சயமாகப் பின்னிடம் என்று, வாதாட முனேயும் பரிதாபத்துக் / குரியவரும், தெரிகிறர்!

நமக்குள் ஏனய்யா, வீணன சச்சரவு—நான் சொன்ன இடமாயினும், நீர் பார்க்கும் இடமானலும், இரண்டுமே, காவியத்துக்குச் சிறப்பளிப்பதுமல்ல, காகுத்தன் பெருமையைக் காட்டத் தேவையற்றது மாகும்.—அல்லவா! ஏன், கம்பர், இந்த 'ரசம்' புகுத்த வேண்டும். அவரால் முடியாது, எந்த நேரத்திலும் ஏதாவது, சிறிதளவாவது,ஜாடைமாடையாகவாவது, அதுபற்றிக் கூருமலிருக்க. நல்ல சுகானுபவம், தெரிந்தவர், உம்மைப்போல நன்னூல் சூத்திரத் தோடு கிடப்பவரல்ல!

அம்பிகாபதியின் தந்தை, கவனமிருக்கட்டும்! அவர் எங்குதான் செல்லட்டும், கதையின் எந்தப் பகுதியாகத்தான் இருக்கட்டும், எவ்வளவு நெருக்கடியான கட்டமாகத்தான் இருக்கட்டும், அவர் அவருக்குப் பிடித்தமான பொருளே, நிகழ்ச்சியைப் படமெடுத்தே தீருவார்! கதையைக்கூட, ஒரு தள்ளுத் தள்ளி விடுவார் அந்த 'விவகாரம்' வந்தால், அல்லது எதற்காவது உவமையாக அந்த 'வஸ்துக்களே'க் குறிப்பிடக்கூடும் என்று அவருக்கு இலேசாகத் தென்பட்டுவிட்டாலும் போதும். கவிதைத்தேன் சொட்டும், வழியும், பொழியும்.

மிதிலேக்கு வாருங்கள்! கண்ணேக் கண் கவ்வவில்லே—இராமன் சீதையைக் காணவில்லே. மிதுலே வீதி! அங்கு செல்கிருர் கம்பர்! பாவத்தைச் சம்ஹரித்துத் தர்மத்தை நிலே நாட்டுவதற்காக, தசரதன் திருக்குமாரனுக வந்துள்ள இராமபிரானுடன், மும்மலம் அடக்கிய முனிவர் செல்கிருர்—

சூழ்நிலைக்காகச் சொல்கிறேன்; மான் வேட்டை யாடச் சென்ற துஷ்யந்தனுடன் செல்லவில்லை, நினைவில் வைத்துக்கொள்ளுங்கள். மேகவர்ணன் செல்கிறார், வேத முணர்ந்தோர் அழைத்துச் செல் கிறார்; அப்படிப்பட்ட சூழ்நிலையில், கம்பர், மிதுலை வீதியை வர்ணிக்கிறார்!

**எங்கும் வேத ஒலி!**
**வேள்விப் புகை!**
**தான தர்மக் காட்சிகள்!!**
**பகவத்பஜனை!**

இவைகளையா காட்டுகிறார்! திருப்தி அடைபவரா கம்பர்! கூர்ந்து கவனிக்கிறார், ஒரு பெரிய நகருக் குள் வந்துவிட்டோம், காடு மலை வனம் கடந்து, இப் போது, நமக்குத் தெரியவேண்டியது, தெரிய வேண் டுமே, என்று கவலைப்படுகிறார். பெண்கள் கூடத் தெரியவில்லை. மிதிலைக் காட்சிப் படலத்தில், கொடி கள் குறித்த கவிதைகள் இரண்டு பாடுகிறார்! கொடி களைக் கண்டுவிட்டு மேலால் செல்கிறார் யானைகள் போர் புரியும் காட்சி தெரிகிறது.

இரண்டு யானைகள் ஒன்றை ஒன்று தாக்கிக் கொண்டு, போர் புரிகின்றன!

கண்டார் கம்பர்! ஆஹா! என்ன அருமையான காட்சி.

மலையும் மலையும் மோதுதல் போல அல்லவா உள்ளது இக்காட்சி, என்று எண்ணுகிறார்—எந்தக் கவிக்கும் இது தோன்றும்—கம்பருக்கு, இத்துடன் கற்பனை நின்றுவிடுமா!

இந்த யானைகள் ஒன்றோடொன்று போரிடுவது, எப்படி இருக்கிறது தெரியுமா.

மன்மத பாணம் பட்டமாத்திரத்தில் ஆடவனும் பெண்ணும், கலவிப் போரில் ஈடுபடுவார்களே, அதிலேயே ஊடலும் இருக்குமே, அதுபோலல்லவா இருக்கிறது—என்கிறார், இதுதான் கம்பர்.

மதக்களிறுகள் போராடுவது கண்டதும், மன்மத பாணத்தால் தாக்கப்பட்டோர் நடத்தும், மதன விழா கண்ணில் பளிச்செனத் தெரிகிறது—கவிதை சொட்டத் தொடங்கிவிடுகிறது — கேளுங்கள் கவிதையை,

**தயிர் உறுமத்தின்**
**காமன் சரம்பட**
**தலைப் பட்டு**
**ஊடும்**
**உயிர் உறுகாதலாரின்**
**வயிரம் வால்மருப்பு யானை**
**செயிற் உறுமனத்த ஆகி**
**செம்கண் தீ திரள் சிந்த**
**ஒன்றை ஒன்று ஒருவகில்லா**
**மலை என**
**மலைவ! கண்டார்.**



பொருள் எளிதாக விளக்கமாவதற்காகக் கவிதையைத் துண்டாடித் தந்திருக்கிறேன்! சாதாரணப் போர் அல்ல — ஒன்றுக்கொன்று இளைக்காதன, அந்த யானைகள். அந்தயானைக்ளின் போர், கலவிப் போரைத்தான் நினைவூட்டுகிறது, கம்பருக்கு. மிதிலைக்குள் நுழைந்ததும், கம்பரசம்.

மேலும் இரண்டோர் கவிதைகளை முடித்துக் கொண்டு, மீண்டும் ரசமளிக்க வருகிறார், எட்டாவது **கவிதையில்.**

யானைகள் போரிட்ட காட்சி கலவிப்போரைக் கவனப்படுத்திற்றல்லவா. கலாரசிகர்கள் அதே நினைவாக இருந்துவிட்டால், நல்லதா—எனவே இந்த எட்டாம் பாடலில், போர் முடிந்தது என்ற அதி முக்கியமான செய்தியைத் தருகிறார். முன்புதான் யானைகள் போரிடக் கண்டார். மலைகள் மோதின என்று கூறினால் போதாது என்று எண்ணி, மலரணையில் நடைபெறும் மதன லீலையைக் கூறினார். இப்போது, அதன் தொடர்பான செய்தி கூற, என்ன வாய்ப்புக் கிடைத்தது, என்பீர்கள். மன மிருந்தால் மார்க்கமா கிடைக்காது! வல்லவனுக்கு புல்லும் ஆயுதமாமே! கம்பர், மாலைகள் வீதியில் விழுந்து கிடக்கக் காண்கிறார், மாலைகளில் வண்டுகள் மொய்க்கின்றன, தேன் ஒழுகியபடியும் இருக்கிறது. இந்த மாலைகளைக் கண்டதும், கம்ப நாட்டாழ்வாருக்கு, யானைகள் போர் புரிந்தது பற்றிக் கூறிய 'ரசமான' உவமை கவனத்துக்கு வருகிறது. ஆஹா! என்ன அருமை, காரியம் குறைவற நிறைவேறியான பிறகு, இளைத்து இளமங்கையர் துவண்டு கிடப்பது போலல்லவா, இந்த மாலைகள் இங்கு கிடக்கின்றன, என்று எண்ணுகிறார். மாலைகளை உற்று நோக்கியதும், அவர் மனக்கண் மலரணைமீது மதனபிஷேகத்துக்குப் பிறகு அலுத்துக் கிடக்கும் அழகிமீது பாய்கிறது.

வருகிறுன் ஐயன். அம்மையைக் காண வருகிறுன்!— என்று மகிழ்ந்து, தேவர்கள் பூமாரி பொழிந்தனரோ, என்று எண்ணும்படி மிதிலே நகர வீதிகளிலே எல்லாம் மலர்க் குவியலாகக் கிடந்திடக் கண்டேன்—என்று கூறினுல், புண்ய கதைக்கு எந்த விதமான பங்கமும் வந்துவிடாது—ஆனுல் காவியம், 'ருசி' தராது. அவர் 'ருசி' தருவதற்காகவே, ஒரு கதையைக் காவியமாக்கியவர். எனவே, மாலேகளேக் கண்டதும், தெரிகிறதா! மடவார்! மஞ்சம்! கலவிப் போர் முடிந்துவிட்டது! களேத்துப்போன அக்கனி மொழியினர், கட்டிலில் துவண்டு கிடக்கிருர்கள்— இந்த மாலேகள்போல—என்று ரசமான செய்தி கூறிவிட்டுத்தான் மறுவேலே பார்க்கிருர், ரவிகுலச் சோமனேப்பற்றித்தான் காவியம்! ஆனுல், அதை மட்டுமா பன்னிப் பன்னிப் கூறுவது — படுக்கை அறையை அவ்வப்போது கவனப்படுத்த வேண்டாமா—என்று கம்பர் எண்ணுவார், இல்லேயானுல், இப்படிக் கவிதை சுரக்குமா என்று எண்ணிப் பாருங்கள்,

"தண்டுதலின்றி யொன்றித் தலேத்தலேச் சிறந்த காத
லுண்டபின் கலவிப்போரினே சிந்தமென் மகளிரேபோற்
பண்டரு கிளவியார் தம்புலவியிற் பரிந்த கோதை
வண்டொடு கிடந்து தேன்சோர் மணிநெடுந் தெருவிற் சென்ருர்."

கடினமாக இருக்கிறதா, கவிதை, மிக ரசமான விஷயம் இதிலே கூட்டப்பட்டிருக்கிறது, பிரித்துப் பொருள் கண்டிடத்தான் வேண்டும்.

தண்டுதல் இன்றி—நீங்குதல் இல்லாமல்
தலே தலே—கணவன் மனேவி எனும் இரு இடத்திலும்

ஒன்றி—ஒரே தன்மையாய்
சிறந்த—சிறப்பான
காதல்—ஆசையின் பயனாக காம இன்பத்தை
உண்டபின்—அனுபவித்த பிறகு
கலவிப் போரின்—புணர்ச்சி யுத்தத்தில்
ஒசிந்து—இளைத்துக் கிடந்த
மெல் மகளிர்போல — மென்மைத் தன்மையுடைய பெண்கள்போல

இனி உள்ள பகுதி, மாலைகள்பற்றி! இதுவரையில் உள்ள கம்பரசத்தைக் காணுங்கள் — கடவுட் காதையிலே இணைக்கப்படவேண்டியதுதானா என்று எண்ணிப் பார்த்திடுங்கள்.

**தலைதலை ஒன்றி!**
**கலவிப் போர்!**
**ஒசிந்த மெல்மகளிர்!**

எவ்வளவு நுணுக்கமான வர்ணனை! பூஜா மாடத்துக்கா?

கலவிப்போர்—இருவரும் இளைத்தவர் என்று கூறக்கூடமாட்டர் — அந்த விஷயமாக அவர் அவ்வளவு நேர்த்தியான நிபுணத்துவத்தைக் காட்டத் தவறுவதில்லை.

மெல்மகளிர் ஒசிந்தனர்-மென்மைக்கு இருப்பிடமான பெண்கள்தான் இளைத்துக் கிடந்தனர்!

இவ்வளவும், மாலைகளைக் கண்டதும்! மிதிலையில் நுழைந்ததும்!!

எப்படிப்பட்ட ஏந்திழைகளைக் காட்டுகிறார், கம்பர்!

துளசி பூஜை செய்யும் தூய்மையாளர், கணவனுடைய காலைத்தொட்டுக் கண்களில் ஒத்திக் கொள்ளும் பத்னிப் பெண்டிர், பெற்றெடுத்த பொற் கொடி உடலைத் தழுவிட உச்சி மோந்து முத்தமிடும் உத்தமத் தாய்மார், எளியோருக்கு உணவளிக்கும் ஏற்புடைப் பெண்டிர், நூல் கற்று நுண்ணறிவுடன் விளங்கி ஆடவருக்கு அமைச்சர் போல் விளங்கும் விவேகிகள், மகனுக்கு வாட்போரின் நுட்பத்தைக் கற்றுத்தரும் வீரத்தாய்மார், இவர்களையா!! தேவமாக்காதையாகையால், இவர்களெல்லாம்தான் காட்டப்படுவர், என்று எவரும் எதிர்பார்ப்பர்.

குடித்துவிட்டுக் கூத்தாடும் குமாரிகள்!
உளறிக்கொண்டிருக்கும் உல்லாசிகள்.

ஐயயே! என்று அரு வருப்பு அடைந்துவிடக் கூடாது என்பதற்காக, குடித்துவிட்டுக் குளறிக் கொண்டிருக்கும் குமாரிகள்தான், ஆனல் கமலம், முகம்; அழகிகள்! — என்று கூறுகிருர். குடித்துக் கிடக்கிருர்கள், குளறிக் கொட்டுகிருர்கள் என்ருல், பாவம், அடித்தளத்தைச் சேர்ந்த அரிவையர் போலும், ஏழையர் போலும் என்று எண்ணிவிடா தீர்கள்—கம்பர் ஏழையரைக் காட்டவா கோசலைச் செல்வன் காதையைக் காவியமாக்கினுர்! குடித்துக் கிடக்கும் குமாரிகள், சீமாட்டிகள்!

பளிங்காலான கிண்ணம்
புதிய, வாசனை தரும் மது

இங்கிலே, ஏழையருக்கா!!

சீமாட்டிகள், பளிங்காலான கிண்ணத்தில் பசு நறுந்தேறல் மாந்தி, சிரிக்கிருர்கள், வெறி பிடித்த

நிலையில் உளறுகிருர்கள், ஊடலை வெளிப்படுத்து கிருர்கள்!

புரட்சி வெடித்து அழித்திடா முன்பு பிரான்சில், பாரிஸ் சீமாட்டிகள் எவ்விதம் உல்லாசிகளாக, சல்லாபிகளாக, ஆள் மயக்கிகளாக இருந்தனர் என்று படிக்கிருேமோ, அதே காட்சி கம்பர் காட்டும் மிதிலையில்!

உலகின் பல பகுதிகளிலிருந்தும் சீமாட்டிகள் சீமான்களைத் தமது சேல் விழியால் பிடித்திழுத்து வைத்து, ஐரோப்பாவின் சூதாடும் கூடத்துக்கு அழைத்து வருவர் — உள்ள பொருளை எல்லாம் சூதாடித் தோற்பவர்—எனினும் புதுவரவும் கிடைக்கும், பசும்பொன் மேனியும், பவள இதழும், முத்துப் பற்களும், வைரக் கண்களும், ரோஜாநிறக் கன்னங்களும் கொண்டவர்கட்கு, நஷ்டம் என்பது நிலைத்தா இருக்கும்!!

மான்ட்டிகார் லா என்று அழைக்கப்படும், சூதாடுமிடம் மிதிலையில், கம்பர் மூலம் தெரிகிறது பார்க்கிறீர்களா!

பெண்கள் சூதாடுகிருர்கள்! பளிங்கால் செய்யப்பட்ட காய்களைத் தொட்டு விளையாடுகிருர்கள். சூதாட்டக் காய்களைத் தொட்டுத் தொட்டுச் சுந்தரிகளின் கை விரல்கள் சிவந்துபோகுமே, என்று கவலைப்படாதீர், அவர்களின் செந்நிறமான கரம் பட்டுக் காய்கள், சிவப்பாகிவிட்டன.

அப்படிப்பட்ட சூதாட்டம்! வெறும் பொழுது போக்குப் போலும், என்று எண்ணுவீர்.

*அல்ல, நண்பர்களே! அல்ல!*

**கடகம்**
**குழை**
**பூணும் ஆரம்**
**கலிங்கம்**
**மகரயாழ்**

*இவைகளைப் பந்தயப் பொருளாக வைத்துச் சூதாடுகிறார்கள்—சுந்தரிகள்! நீ, குறுக்கே நிற்க வேண்டாம், நாங்கள் கவிதையைக் காணவேண்டும் என்கிறீர்கள் — சரி — இதோ கவிதை — பார்த்துக் கொள்ளுங்கள்.*

**"கடகமும் குழையும் பூணுமாரமும் கலிங்க நுண்ணூல்**
**வடகமு மகரயாழும் வட்டினி கொடுத்து வாசத்**
**தொடையலங் கோதை சோரப் பளிக்கு நாய் சிவப்பத்தொட்டுப்**
**படைநெடுங்கண்ணூர் வட்டாட்டாடிடம் பலவுங்கண்டார்!**

*வட்டு ஆட்டு ஆடு இடம் — சூதாட்டமாடுகின்ற இடம்.*

*பலவும் கண்டார்—பல, கண்டார்!*

*இங்கு பெண்கள், மேலாடை முதற்கொண்டு காதணி வரையிலே கழற்றி வைத்துச் சூதாடினர்!! ஜானகி பிறந்த தலம் அதுதான்!!*

*குடித்துக் கூத்தாடுவர், சூதாடிக் கிடப்பர், கலவிப்போரில் ஈடுபட்டுக் கிடப்பர், அதன் விளைவாக ஊடல் எழும், அதில் ஈடுபாடுடையவராக இருப்பர், பூக்கொய்வர், புனலாடுவர்,–இப்படித்தான் பூவையர் தெரிவர், இந்தப் புண்ய கதை முழுவதும்.*

* * *

"ரிஸ்ட்வாட்ச் எங்கே காணோம்? அடடே!விரலி லிருந்த வைர மோதிரம்கூடக் காணோமே, எங்கே?" என்று கேட்கும்போது, "இருக்கிறது! ரிப்பேர் கடையில்! அலமாரியில்" என்று ஏதோகூறி மழுப்பு கிறான் சூதாடித் தோற்றுவிட்டு, வகையின்றி வாட்டத்துடன் மிரள மிரள விழித்துக்கொண்டு கிடக்கும் வாலிபன். வீடு, கண்டிக்கிறது; நாடு நகைக்கிறது அவனைக் கண்டு; நல்லோர்கள் அவனுக்குச் சூதாட்டத்தின் கேடுகளை எடுத்துக் கூறி நல்வழிப்படுத்த முயல்கிறார்கள்; அவனோ ஒரு சமயம் "ஆமாம்! சூதாடுவது பெருந்தவறுதான்-இனி ஆடக்கூடாது" என்று எண்ணுகிறான், பிற கோர் சமயம், "தோற்ற தொகையைத் திரும்பப் பெற்றுவிடவேண்டுமே, அதற்காக மறுபடியும் ஆடித்தானே பார்த்தாகவேண்டும்" என்று எண்ணு கிறான், கையில் உள்ளதை எல்லாம் பந்தயப் பொரு ளாக்குகிறான், கடன்பட்டும் சூதாடுகிறான், கட்டம் வளர வளர, வீட்டு உடைமையைக் களவாடவும் செய் கிறான், பிறகோ ஊரார் உடைமையையே தன தாக்கிக்கொள்கிறான். இத்தகையோர் எள்ளி நகை யாடத் தக்கவர்; இடித்துரைப்பர் பெரியவர்கள்—இத்தகைய இழி குணம் மனதிலே எழாதிருக்கவே, புண்ய கதைகளைப் பாராயணம் செய்தல் வேண்டும்; நன்னெறி சென்ற பெரியோர்களின் காதைகளைப் படித்தால், படிக்கக் கேட்டால், மனதிலே தூய்மை யான எண்ணம் மலரும், களவு, காமம், சூதாடல் போன்ற தீய காரியங்களை வெறுத்தொதுக்கும், மன திடம் உண்டாகும் என்றெல்லாம் கூறுகிறார்கள்.

இதோ கம்பரின் காவியத்தில், கலிங்கம் தனை வட்டினியாக வைத்து, மேலாடையைப் பந்தயப் பொருளாக வைத்து மிதிலைப்பெண்கள் சூதாடுகிறார் கள்—இது தவறு தையலரே! என்று இடித்துரைப் பார்கூடக் காணோம்; இவ்வளவுக்கும் மிதிலா நகரத்தை ஆட்சி செய்துகொண்டிருந்தவர் இராஜரிஷி, ஜனகர்! சூதாடுவதை இவ்வளவு சுவை பட எடுத்துக்கூறுவது, ஞானத்தையும் சீலத்தையும் வளர்க்கவா? எங்ஙனம் வளரும்! கம்பருக்கு இந்தக் கவனமெல்லாம் கிடையாது. அவர் பாடப் போந்தது, இராமாவதாரக் காதைதான் எனினும், மாதர்கள் குறித்த பகுதி வந்துவிட்டால், அவர் அடைந்து விடும் சுறுசுறுப்பு வேறு எந்தக் கவியாலும் போட்டி யிட முடியாததாகிவிடுகிறது. அவர்களை எப்படி எப்படியெல்லாமோ இருக்கவைத்துப் படமெடுத்துக் காட்டிப் பூரிக்கிறார்! ஆடச் செய்கிறார், பாடச் சொல் கிறார், அருவியில் குதிக்கச் சொல்கிறார், ஆடவருடன் கூடச் செய்கிறார், சூதாடச் சொல்கிறார், பசுநறுந் தேறலைக் குடித்துவிட்டுக் குளறிக்கொண்டும் இருக்கச் சொல்கிறார்! அழகிகளாக மட்டும் இருக்க வேண்டும், அவர்கள் எந்தச் செயலில் ஈடுபடினும் அவருக்கு அவர்களைப் படம்பிடிக்க அட்டியில்லை; புண்ய கதை பாடத்தொடங்கிறோம், பூவையரின் 'பாதாதிகேச' வருணனையிலேயே சிந்தனையைச் செலவிடுகிறோமே, என்ற கவலை அவருக்குப் பிறப்ப தில்லை; அவர் காவியமூலம் ரசம்' தருபவர்!!

எதைக் கண்டாலும், அந்தக் கவனமே அவருக்கு முந்திக்கொண்டு வந்துவிடுகிறது.

மலைமீது மழைத்துளிகள் விழுகின்றன!— பலரும் பார்த்திருக்கிறார்கள்—கவிகள் பலபேர் கவிதையாக்கியுமிருக்கிறார்கள், கம்பர் இந்தக் காட்சியைக் காணும் போது, வேறு எந்தக் கவிஞனுக்கும் எழாத உவமைதான் மனதிலே உதிக்கிறது.

மலையின் மீது மழைத்துளி !

இதை அப்படியே நினைவிலே வைத்துக்கொள்கிறார், சமயம் வாய்க்கும்போது பயன்படுத்துவோம் என்று.

அன்னை ஜானகி ஐயனைத் தெருவிலே செல்லும் போது காண்கிறார்; கண்டதும் காதல் சுரக்கிறது; கம்பர், அன்னையின் நிலைபற்றி அழகாகப் பாடிக்கொண்டு வருகிறார்; அப்போது அவருக்கு அந்த மலை மிசை வீழ்த்திடு மழைத்துளி நினைவிற்கு வருகிறது, அவ்வளவுதான்; உடனே, அம்மையானால் என்ன, ஐயனின் தேவியானால் என்ன, உடனே கம்பரசம் வெளிப்படுகிறது!

மலைமீது மழைத்துளி வீழ்கிறதே, அதுபோல ஜானகியின் கண்களிலிருந்து பெருகிய நீர்த்துளிகள், அவர் தம் மேலிடத்து நுனியிலே வீழ்ந்தன, என்கிறார்.

மலைமிசைதடத்துகு
மழைக்கனலிபோன்

மலையினது மேலிடத்திலே சிந்துகிற, மேகத்திடம் பிறக்கிற மழைநீர்த் துளிகள் போல,

மலைமுகட்டுதிர்ந்தன
நெடுக்கண் முத்தினம்
மேலிடத்து நுனியிலே கண்ணீர்
முத்துக்கள் சிந்தின!

கட்டம் எதுவானல் என்ன! மேலிட வருண னைக்கு ஒரு வாய்ப்புக் கிடைத்தது, விடவில்லை கம்பர்! மலைபோன்றது என்று கூறுகிறார்—ரசிகர் களுக்கு. எடுத்துக்கொண்ட பொருள் இராம காதை பக்தர்களுக்கு; அதிலே இந்த மலைமுகடுபற்றிய வர்ணனை ரசிகர்களுக்கு! எந்தச் சமயத்திலும் ரசிகர் களை ஏமாறச்செய்து விடக்கூடாது என்பது கம்பரின் பெருங்குணமாக அமைந்திருக்கிறது, காப்பிய முழுமையும்.

கலவிப்போர் பற்றியும் ஆங்கு நிகழும் நானு விதமான நயங்கள் குறித்தும் பாடுவதிலே இவரை ஒப்பாரும் மிக்காரும் இல்லை என்று விருதுபெற முனைந்து பாடக்கிளம்பினவர் போலும் இந்தக் கம்பர் என்று தோன்றும், பல இடங்களிலே உள்ள பாக்களின் அமைப்பைக் கவனிக்கும்போது.

ஐயன், சீதாராமனுகப் போகிறுன், மைந்த னுடைய திருமணத்தை நடத்தித் தருவதற்காகத் தசரதன் தன் பரிவாரம் புடை சூழச் சென்று கொண்டிருக்கிறார். யானையும் குதிரையும், சிவிகை யும் எருதும், வாத்தியக்காரரும் வீரரும், ஆடவரும் பெண்டிரும்—பெருந்திரள் செல்கிறது. வைகுந்தத் தில், பல்லாயிரம் தேவர்கள் புடைசூழக் கொலு வீற்றிருக்கும் மகாவிஷ்ணு அல்லவா இங்கு இராம

ஞக அவதரித்துள்ளார். அப்படிப்பட்ட புருஷோத்த மனுக்கல்லவா திருமணம், அதற்குத் தகுந்தது போலிருக்கவேண்டாமோ, காணச்செல்லும் கூட்டம்! என்று பாடிவிட்டாலே போதும், அந்த அளவு சுவை போதும், ஐயனையும் மறவாமல், காட்சியையும் காண்பர், களிப்பர்! கம்பர் என்ன செய்கிறூர்.

பெருந்திரள் செல்லும் வீதியைப் பார்க்கிறூர்—எங்கும் ஒரே குங்குமக் குழம்பு சிதறிக்கிடக்கிறது. உடனே, அவருக்கு, மெல் அணை, அதாவது மெல்லிய படுக்கைமீது நினைவுபாய்கிறது; அந்தப் படுக்கையில் இப்படிக்காட்சி இருக்கும், அங்குதான் ஏழையர் துணைமுலை குங்குமச் சுவடும், ஆடவர்மணிவரை புயங்களிற் சாந்தும் மாழ்கிடும், அதாவது மலரணையில் தான் ஆடவனும் ஆரணங்கும் கலவிப்போரில் ஈடுபட ஒருவரை ஒருவர் நெருங்குதலால், மாதரின் மேலிடத்தில் பூசப்பட்டுள்ள குங்குமக் குழம்பும் ஆடவர்களின் கரத்தில் பூசப்பட்டுள்ள சந்தனப்பூச்சும், ஒன்றூகக் குழைந்து, கீழே சிதறும்—இங்கு யானையும் சேனையும் செல்லும் வீதியிலே பார்த்தால், அந்தப் படுக்கை பொலவே, எங்கும் குங்குமக் குழம்பு சிதறிக்கிடக்கிறதே!!-என்று எண்ணிக் களிக்கிறூர். கூட்டம் அதிகம், ஒருவரை ஒருவர் இடித்துக்கொண்டும் நெருக்கிக்கொண்டும் செல்லவேண்டி இருக்கிறது—ஆடவரும் பெண்டிரும் செல்கிறூர்கள்—எனவே, குங்குமக் குழம்பணிக் கொங்கையரும், சந்தனப்பூச்சணி ஆடவரும் ஒருவரை ஒருவர் நெருக்கிக்கொண்டு நடப்பதால், மலரணையில்

மாழ்குவதுபோல, குழம்புகள் வழிந்தொழுகுவது போல, இங்கும் வீழ்கிறது, சிதறுகிறது.

இணையெடுத்திடையிடை நெருக்க வேழையர்
துணைமுலைக் குங்குமச் சுவடு மாடவர்
மணிவரைப் புயங்களிற் சாந்துமாழ்கிமேல்
லணையெனப் பொலிந்ததக் கடல் செலாறரோ !

குங்குமச் சுவடு !
சந்தனச் சாந்து !
இடை இடை நெருக்குதல்!

இவைகளை நினைவிற்குக் கொண்டுவருகிறார்! இப்போதுதான் புறப்படுகிறார் அயோத்தியைவிட்டு—எழுச்சிப் படலம்—தனி நிருபர், நேரு பண்டிதரின் சீன விஜயம் பற்றிய செய்திகளைத் தன் இதழுக்குத் திரட்டச் செல்லும்போது, என்ன வகையான செய்திகள் அனுமதிக்கும்—நேரு பண்டிதரின் நற்பெயருக்கு இழுக்கு ஏற்படாத வகையானதும், அவர் எடுத்துக்கொண்டுள்ள அரும்பெரும் செயலின் மேன்மையை அவ்வப்போது விளக்கிக்காட்டும் தரத்ததுமான செய்திகளைத்தானே, தனிநிருபர் தரவேண்டும் என்று கூறுவீர்கள். கம்பர் கரிய செம்மலின் கடிமணம் காணச் செல்கிறார் தசரதன் தன் சேனையுடன்; அவர் தரும் 'பிரத்யேகச் செய்தி' துவக்கத்திலேயே இது; கலவிப்போரில் குழைந்து சிதறிய குங்குமக் குழம்புபற்றி!

கோசலைச் செல்வன் மிதிலைச் செல்வியைத் திருமணம் செய்து கொள்வது கேட்டுத் தசரதன் மகிழ்ந்தார், இயல்பு தான்—ஊரார் மகிழ்ந்தனர் 'உத்தமனும் இராமனுக்குத் திருமணம்' இவர்கள்

யாரைக்காட்டிலும் கம்பருக்கு உண்டாகிவிட்ட களிப்பு மிக அதிகம்—பொங்கி வழிகிறது.

**எழுச்சிப் படலம்**
**வரைக்காட்சிப் படலம்**
**பூக்கொய் படலம்**
**புனல் விளையாட்டுப் படலம்**
**உண்டாட்டுப் படலம்**

என்று பாடிப்பாடி மகிழ்கிருர். மகிழ்ச்சிகரமான வேளை! மடவாரும் மணாளரும் மந்தகாசமாக உள்ளனர்! மலர் வனம்! ஊர்ப்பயணம் செல்கிருர்கள்!—கம்பர் 'காலமெல்லாம் காத்துக்கிடந்த சூழ்நிலை' கிடைத்து விட்டது என்று களித்துக், கவிதையை அள்வி அள்ளித் தருகிருர். சின்னஞ் சிறு பாலர்கள் திருவிழா காணச் செல்லும்போது, தாயின் கரத்தைத் தொட்டும் கன்னத்தைக் கிள்ளியும், ஆடையைப் பிடித்திழுத்தும் "அம்மா! அதோ பார் மிட்டாய்! இதோ பாரம்மா பொம்மைகள்! ஐயோ! அங்கே கருப்பட்டி! இவன் பாரம்மா ஊதுகுழல் விற்கிருன், அம்மா, பலூன்! அம்மா, அவல்பொரி,என்று தாம் காணும் பொருளை எல்லாம், ஆவல் குழையக் குழைய கூறிக்காட்டி, வாங்கித் தரும்படி கேட்கிருர்களல்லவா. கம்பர், திருமணம் காணச் செல்லும், திரளான கூட்டத்திலே நுழைந்துவிட்டார், கேட்கவா வேண்டும், ரசிகர்களைக் கூவிக் கூவி அழைக்கிருர், குதூகலத்தோடு கூறுகிருர், "பாவையைப் பார்! அவளைத் தொடர்ந்து செல்லும் பாங்கனைப் பார், ஏவுகிருள் பார் கண் அம்பு, ஏங்குகிருன் பார் இளையோன்! வார்குலாமுலை வைத்த

கண் வாங்காது பார்த்திடும் அந்த வீரனைப் பார்!" என்று காட்சி பலவற்றைக் காட்டியபடி கவிதைகள் ஏறக் குறைய முந்நூறு பொழிகிறார்—அவ்வளவும் புண்யம் பெறவோ, 'பூஜிதனின்' பெருமைகளை அறியவோ துளியும் உதவுவன அல்ல, முழுக்க முழுக்கக் காமச் சுவை நல்குவன—காவியச் சிறப்புக்குத் தேவையற்றன. காவியச் சுவையைக் கூடுதலாக்குவதற்காகக் காமச் சுவையை மிகுதியும் கூட்டத்தான் வேண்டுமென்று வாதாடுவோர் தமிழின் பெருமையையோ, புலமையின் மாண்பையோ அறிந்து போற்றுவோர் என்று எம்மால் ஒப்புக்கொள்ள முடியவில்லை! வருந்துகிறோம். இந்த பகுதியிலே வரும் கவிதைகளிலே சிலவற்றைப் படித்திடும் 'பேறு' பெண்டிருக்குக் கிடைக்குமானால், "ஐயகோ! எம்மை இப்படி எல்லாமா அப்புலவன் இழித்துரைத்திருக்கிறான்!" என்று பதறிக் கேட்பர். அவ்வளவு நுணுக்கங்கள் நெளிகின்றன, கவிதைகளில்.

வார்குலா முலைமீது வைத்தகண்ணை வாங்கிடாததால் மாமதயானைமீது மோதிக்கொண்ட ஆடவனைப் பற்றிய வர்ணனை, உள்ளவைகளிலே மிகமிக நாகரிகமான கவிதை.

சுழிகொள் பாய்பரி மீதிருந்த தோகையாள் நழுவி வீழ, அவளைத் தாவி எடுத்துத் தழுவியபடி நின்ற ஆடவனைப் பற்றிய கவிதை, நாசுக்கானது. ஆனால், மேலால் செல்லச் செல்ல, சூடு ஏறஏற, இசைவாணர்களுக்குச் சாரீரம் வெண்கல நாதம் பெற்று, அதற்கு முன்பு 'சஞ்சாரம்' செய்ய முடியாத இடங்களுக்கெல்லாம் சென்று, நின்று, வளைந்து,

நிமிர்ந்து பாடும் பான்மைபோல,இத்தகைய கவிதைகளைப் பாடிப்பாடி, மகிழ்ச்சி மதுவை உண்ட பிறகு, கம்பர், கட்டுக்கு அடங்காமல், கனவேகத்தில் எல்லா இடங்களுக்கும் செல்கிறார், எல்லாவற்றையும் எடுத்தெடுத்துக் காட்டுகிறார் !!

துகில் வீழத் தளிர்க் கையால் அணைத்துக் கொண்டு, ஆடை அவிழ்ந்து விடுகிறது, அதை உணர்ந்த ஆரணங்கு தன் மெல்லிய கரத்தால், நெகிழ்ந்து விழும் ஆடையைப் பற்றியபடி ஓடுகிறாள்—வேழம் வருகிறது என்ற அச்சத்தால் !

மற்றோர் மாது, மெல்லிய ஆடையை அணிந்திருக்கிறாள்—இப்போது திரைப்படக் காட்சி மூலம் தீயன புகுந்துவிடாமற் தடுப்பதற்காக அமர்த்தப்பட்டிருக்கும் கத்தரிக்கோலார் நிச்சயமாக அனுமதிக்கமாட்டார்—அவ்வளவு மெல்லிய ஆடை—எவ்வளவு மெல்லியது என்று எண்ணுகிறீர்கள்—உள்ளே உள்ள படர் அல்குல் வெளியே தெரிந்து விடும் அளவுக்கு மெல்லிய ஆடை-வெளியே தெரிவது என்றால்,குறும்புக் குணமுடைய குமாரர்கள் கூர்ந்து நோக்கினால் தெரிவது அல்ல, ஆடிடும் மயிலுக்குத் தெரிந்துவிடுகிறது அக்காட்சி, அதனை அது அரவம் என்று எண்ணிடுமோ, பாம்பைக் கண்டால் மயில் கொத்திக் கொல்ல வருமே, என்ற அச்சம் அணங்குக்கு வந்து விடுகிறது. பூவை வெட்கி, அஞ்சி பூங்கொம்பினருகே மறைந்து கொள்கிறாள் !

மயிலுக்குத்தான் பாகொக்குஞ் சொல்பாவை அஞ்சினாள், மைந்தர்களிடம் அச்சம் ஏன் கொள்ள

வேண்டும். எனவே பெண்கள் ஆடிப்பாடித் திரிகின்றனர்; ஆடவரும் ஆனந்தமாக உள்ளனர்.

"பெண்ணே! அதோ அந்தச் செவ்விளநீர்க் காய்களைப் பார்த்தாயா?"

"ஆமாம்! அழகாகத்தான் உள்ளன."

"கண்ணே! இளம் பெண்களின் மேலிடம் போல இருக்கிறதல்லவா, செவ்விள நீர்க்காய்!"

"ஆஹா! எந்த மங்கையின் மேலிடத்தைக் கண்டுவிட்டு இவ்விதம் பேசுகிறீர்!"

இப்படி எல்லாம் உரையாடல்! அற்பன் நான் கூறுவதல்ல, அரிதாசனும் கம்பன் அழகுக் கவிதையில் கூறியிருக்கிறார்!

**செம்மாந்த தெக்கின்னிள நீரை**
**யோர் செம்மனோக்கி**
**யம்மா விவை மங்கையர் கொங்கையினைய வென்ன**

என்பது கம்பர் வாக்கு. அயோத்தி ஆடவனின் நோக்கு எத்தகையது என்பதை விளக்க.

**செம்மாந்த**—ஓங்கி வளர்ந்த
**தெங்கின்**—தென்னை மரத்திலுள்ள
**இளநீரை**—இளநீர்க்காயை
**ஓர்செம்மல்**—ஒரு தலைவன்
**நோக்கி**—பார்த்து
**அம்மா**—ஆச்சரியம்!
**இவை**—இந்த இளநீர்க் காய்கள்
**மங்கையர்**—பெண்களுடைய
**கொங்கையின்**—மேலிடம்போல்

ஆய—உள்ளன
என்ன—என்று கூற.

மற்ற இரண்டடி கோபித்துக்கொண்ட கோகிலத்தைப்பற்றி!

இவன் அதிர்ஷ்டக் கட்டை! இளநீர்க் காயைப் பார்த்து இளிக்கிறுன், இங்கிதம் தெரியாமல் தன்னை உடைமையாகக் கொண்டவள் எதிரிலேயே பேசியும் விடுகிறுன், பெரும்பிழை செய்கிறுன். இதோ இவனைப் பாருங்கள்!

நீர் குடைந்து ஆடும் மாதர் குழாம் புடைசூழ, நின்று களிக்கிறுன்.

அதோ ஓர் அணங்கு, அன்னம் நீந்திச்செல்வது போல! இதோ ஒருவள், குவளை எது? கண் எது என்ற மாறுபாடு தெரியவில்லை! இப்படி இளமங்கையர், அந்த நீர் நிலையிலே குடைந்து ஆடுகிறுர்கள்; அங்கு யார் செல்ல முடியும்! பண்பல்லவே! ஆனல், சென்று கண்டால்? மகிழ்ச்சிதான்! அனைவருக்கும் அந்த மகிழ்ச்சி கிடைக்கட்டும் என்று தம் கவிதா சக்தியைக் கொண்டு படம் பிடிக்கிறுர்; அப்படிப்பட்ட படப் பிடிப்பிலே இதுவொன்று.

குடைந்து நீராடுமாதர் குழாம்புடை சூழ வாழித்
தடபுயம் பொலிய வாண்டோர்
தார்கெழு வேந்தனின்றுன்,

தார்கெழுவேந்தன் நிற்கிறுன்—மாலையணிந்த மன்னன்! எங்கு? களத்தில்! களிறும் பரியும் நிரம்பி, வேலும் வாளும் ஒலிக்கும களத்தினிலே போலும் என்று எண்ணுவீர். கம்பர் காட்டிடும் தார்கெழு

வேந்தன் தடம்புயம், பெரிய புயங்கள் உள்ளவன் தான், வலிவும் பொலிவும் நிரம்பியவன், அவன் நிற்கும் இடம், களமல்ல, குளம்! அவனைச் சூழ இருப்பவர், பகைவரல்ல, பதுமலோசனிகள்! நீராடும் மாதர்!! நிற்கலாமா என்று கேட்கத் தோன்றுகிறது. பண்பல்லவே இது. பாவையர் குளிக்கும் இடம்—அங்கு ஆடவர் இருத்தல் அழகாகாதே என்று கூறுவீர்கள். உங்களுக்கென்ன தெரியும், உதவாக் கரைகள்! காவியமென்றால், இந்த 'ரசனை' எல்லாம் இருத்தல் வேண்டும் என்கிறார்கள் கலா ரசிகர்கள். குளத்திலே குடைந்து விளையாடும் மாதர்—அவர்கள் புடைசூழ நின்ற அந்த மன்னவன், தென்னையின் இளநீர்க்காயைக் கண்டே மனதைக் குழப்பிக் கொண்ட ஆடவனைவிட அதிர்ஷ்டசாலியல்லவா! ஏன்! கார்மேகவண்ணனும் கண்ணனைவிட இவன் அதிர்ஷ்டக்காரனய்யா! கண்ணன் கூடப், புன்னை மரத்தின்மீது உட்கார்ந்துகொண்டு, புல்லாங்குழலும் ஊதிக்கொண்டு கீழே தடாகத்தில் நீராடிக்கொண்டு இருந்த பெண்களைக் கண்டார். இவன் பக்காப் பேர்வழி! குளத்திலேயே, இறங்கிவிட்டான். இவனினும் உரம் பெற்றவர்களாக அல்லவா அந்த உல்லாசிகள் இருக்கிறார்கள். அவன் நிற்கிறான்—இவர்கள் நீந்தி விளையாடுகிறார்கள். குடைந்து நீராடும் மாதர் புடைசூழ அவன் நிற்கிறான்! அந்த மாதர்களின் 'மன்னர்கள்' என்ன எண்ணினரோ, பாபம், கம்பர், அனுதாபத்துடன் அவர்களைப்பற்றி ஏதும் கூறாமல் விட்டுவிட்டார்.

குடைந்து நீராடினர் என்றால், ஆடையுடன் இருந்திருக்கக்கூடாதோ, நீ ஏன் அவர்களேதோ நிர்வாணமாக இருந்ததாக இட்டுக் கட்டிக்கொண்டு, இது சரியா, இது தகுமா என்று குடைகிருய், என்று கேட்டிட எண்ணும் கலாவாணர் இருக்கிருர், உணர்கிறேன். எனக்கும் அத்தகைய கலாவாணர்களுக்கும் ஏன் வீண் மனஸ்தாபம் என்பதற்காகப் பாடுவது போலக் கம்பர் நீராடிய மடவார் எந்த நிலையில் இருந்தனர் என்பதைத் தெளிவாகக் காட்டிவிட்டிருக்கிருர் — கவிதையில்! எழுச்சி குதித்துக் கூத்தாடும் நடை அழகுடன் கூறுகிருர், கேண்மின்.

தேரிடைக் கொண்ட அல்குல்
தெங்கிடைக் கொண்ட கொங்கை
யாரிடமும் கொள்ள ஒண்ணுத பேரழகு

இவை வாய்க்கப்பெற்ற பெண்கள்! பொருள், எளிதுதான். தேர்த்தட்டு போன்ற அல்குல்! இடை என்று இதனைக் கூறுவோர் இடை, கொடிபோல், இருத்தல் வேண்டும் என்பதை எண்ணிடுவராக,

தென்னைமரத்திலுள்ள இளநீர்க்காய்போன்ற மேலிடம்,

யாரிடமும் பெறப்பட முடியாததான, ஒப்பற்ற அழகு.

இப்படிப்பட்ட மங்கையர், நீரில் மூழ்கி விளையாடுகிருர்கள்.

தேர்த் தட்டும், தெங்கின் காயும், வெளியே தெரிகிறது-கவிக்கு. எனவே அந்தத் தடம்புயம் தார்செழு வேந்தனும் கண்டிட வாய்ப்பு இருக்கிறது. புனல் விளையாட்டுப் படலம், கவிதை எண்,

பதினேழு.

இவ்வளவு 'சவிஸ்தாரமாக'க் கூறியும் திருப்தி அடையாத தீந்தமிழ்ப் புலவர் பெருமான் இந்த மங்கையர் நீந்தி விளையாடியது எங்ஙனமிருந்தது எனில் என்று கூறுகிறார்—ஆபாசத்தின் எல்லைக்குச் சென்று விடுகிறார், அநாயாசமாக.

செய்யவாய் வெளுப்ப
கண்சிவப்புற
மெய் அராகம் அழிய
துகில் நெக
தோய்யின் மாமுலை மங்கையர்
தோய்தலால்
பொய்கை
காதல் கொழுநரும்
போன்றதே!

நீராடுமிடமும் காதலாடிடும் கணவரும் ஒன்று போன்றதே என்கிறார்.ஏன்? எப்படி என்பீர்கள், கணவருடன் கூடிக் களித்தால் என்ன நிலை ஏற்படுமோ, அது இங்கே நேரிட்டுவிட்டதே—குளமும் கணவரும் ஒன்றுபோலத்தான். என்று கூறிவிட்டு, மறுக்க முடியாத திறமையுடன் வாதாடுகிறார், சந்தேகிப்பவனைப் பிடித்திழுத்துவந்து கேள்விகள் கேட்டுப் பதில் வாங்குவதுபோலக், கவிதையில் திறமையைக் காட்டுகிறார்.

ஆடவருடன் நேரிழையார் கூடிடின் என்ன நேரிடும்;

நெந்நிறமாக இருந்த வாய், வெளுப்பாகும்,
(அதரபானம் செய்வதால்)
கண் சிவந்துவிடும்,

(காமக் களியாட்டத்தால்)
கொங்கையில் எழுதி இருந்த தொய்யல்
அழிந்துபடும்.
(தடம் புயத்தால்)
துகில் நெகிழும்,
(துவக்கமே அது ஆகலான்)

எனவே, பொய்கையும் கணவரும் ஒன்று போன்றதே! என்றுகூறுகிருர். எத்துணை நுணுக்கமான காமச்சுவை-இதற்கோ பெருக் காப்பியம்பாட முனைந்தார்! நெகிழும் ஆடை, தொய்யில் அழிந்த தனம், வெளுத்த உதடு, சிவந்த கண், இவைகளைக் காணவா, இராமாயணம்! இத்தகைய காட்சிகள் காம விசாரத்தை உண்டாக்கிக், கடவுட் காதைக்கு உரிய மாண்பினையே மாய்த்துவிடும் என்பது எம் எண்ணம்.

ஆடினர், பாடினர்—ஆடவரும் மடவாரும், எனினும், அவர்தம்சிந்தைகெடவில்லை, சீரிய தன்மை பாழ்படவில்லை என்று கவி கூறவுமில்லை, பாதுகாப்பு நோக்கத்துக்காகவேனும்! அவர், அவருடைய ஆதரவாளர்கள் போல, 'இலை மறை காய்' நோக்கினருமல்ல! புனல் விளையாட்டு, காமத் தீயைக் கிளப்பி விடத்தான் செய்தது, என்று கூறி என் சார்பில் வாதாடுகிருர் ஒரு கவிதை மூலம்.

குளம் கொதிப்பெடுத்து விட்டது—தேன் சிந்தும் மலர்கள் நிரம்பிய குளம்—அந்தக் குமாரி குளித்ததால்! உடல் வெப்பம் போகக் குளிர் நீரில் குளிக்கச் செல்கிருர்கள்—இந்த மங்கையும் அது போலவே சென்று நீராடுகிருள்—அனல் அந்த நீர் நிலை நெருப்பிலிடப் பட்டதாகி விடுகிறது, கொதிக்

கிறது! ஏன்! தீ மூட்டிவிட்டாள் அந்தத் தளிர் மேனியாள், அவள் மீதும் குற்றமில்லை — அவள் கண்ட காட்சியோகொண்ட எண்ணமோ அவளுக் குக் காமத் தீயைக் கிளப்பி விட்டுவிட்டது–அதனு லேயே குளிர்பொய்கைக்கே சூடேறி விட்டது.

காமத்தால் வெதும்புவாள் என்று விளக்கமாகவே கவி கூறிவிட்டார். காமத்தீ, அவளையும் அவள் சேர்ந்தாடிய குளத்தையும் சும்மாவிடுமா. கேளுங் கள் கவிதையை,

கதம்ப நாள்விரை கள்ளவிழ் தாதொடுந்
ததும்பு பூந்திரைத் தண்புனல் சுட்டதா
னிதம்ப பாரத்தோர் நேரிழை காமத்தால்
வெதும்பு வாளுடல் வெப்பம் வெதுப்பவே-

காமத்தால் வெதும்புவாள்—காம வேதனையால் வெப் பம் கொண்டவளும்,

நிதம்பம் பாரத்து ஓர் நேர் இழை—நிதம்ப பாரத்தைக் கொண்டவளுமான அழகிய ஆபரணம் அணிந்த மடந்தை ஒருத்தியின்

உடல் வெப்பம்—உடம்பின் கொதிப்பு

வெதுப்ப—சுட்டதாலே

கதம்பம்—நறுமணப் பொடியும்

நாள்—அன்று மலர்ந்த

விரை—மணமுள்ள

கள் அவிழ்—தேன் சிந்தும்

தாதொடு ததும்பு பூ — தாதுக்களோடு மலரும் உள்ள

திரை தண்புனல்—அலைகளுள்ள குளிர்ந்த தடாகமும்

சுட்டது—வெப்பம் கொண்டது.

நிதம்பம் என்பதற்குக் கம்பரின் ஆதரவாளர்கள் எவ்வளவோ பாதுகாப்புடன் இருந்தும் தரக்கூடிய பொருள், இடையின் பின்புறக் கீழ்ப்பக்கம் என்பதாகும்!

உள்ளத்திலே காமத்தீ மூண்டிட, உடல் வெப்பம் கொள்ள, அவள் தீண்டியதால் தடாகமே சுட்டதாம்.

எனவே, புனல் விளையாடிய பூவையர், எத்தகைய உணர்ச்சி வயப்பட்டிருந்தனர் என்பது தெரிகிறது—கம்பர் அதனையும் கூறுகிறார். அத்தகைய பெண்கள் புடைசூழ நிற்கும் ஒரு ஆண் தகை பற்றியும் கூறுகிறார்! நல்ல வேளையாக அத்தோடு விட்டார்.

ஆடவனின் மனம், இத்தகைய காட்சிகளைக் கண்டும் தொடாமல் இருந்திடுமோ. அவர்கள் பட்ட பாட்டினையும் அவர் பாட்டாக்கித் தந்திருக்கிறார்.

எரிந்த சிந்தையர் என்கிறார் அந்த ஆடவர்களை; மனதிலே வெப்பம் மூண்டுவிட்டது, அவர்களுக்கு! மூளாமலிருக்கவா முடியும்—அவர்கள் அங்கு காண்பதோ பொற்கலசங்கள். அவைகளை உரியவர் ரசித்துள்ளனர் என்பதை எடுத்துக் காட்டும் நகக்குறிகள். கண்ட காளையர், கொண்ட வெப்பம் கொஞ்சமாகவா இருந்திருக்க முடியும் — எனவே தான், கவி, எரிந்த சிந்தையர் என்றார்! நாம் கேட்பது, குளிக்குமிடம் சென்று, பொற்கலசங்களைக் காண்பது குணவான்களின் செயலா–அயோத்தி ஆடவர் அங்ஙனம் செய்தது அழகா? அதனை எல்லாம் அரி

அவதார மேன்மைக்காக எழுதப்பட்ட காதையிலே குழைத்திடலாமா என்பதுதான்.

சந்தனம் அழிந்துபோய் விட்டதால், கூரிய நகக் குறிகளோடு காணப்பட்ட மேலிடங்கள் அழகிய நூலைப் பக்கத்திலே சுற்றியுள்ள பொன் கலசங்களைப் போலிருக்கக் கண்டதால், காமவெப்பம் கொண்ட ஆடவர்கள், எத்தனை பேர் என்று எண்ணிச்சொல்ல வல்லேனே:—என்கிறார் கவி.

எரிந்த சிந்தையர் எத்தனை என்கனே
வரிந்தகூர் உகிராய் அழி சாந்து போய்த்
தெரிந்த கொங்கைகள் செவ்விய நூல்புடை
வரிந்த பொற்கலசங்களை மானவே.

தெரிந்த கொங்கைகள்! எரிந்த சிந்தையர்! கொதித்த குளம்!—இவ்வளவுதானு—கண்ணடிக்கும் கட்டழகியும் வருகிறாள்.

மடவாரும் வெப்பம் தாக்குண்டு—ஆடவரும் அங்ஙனமே—அந்த ஜோடியில் ஒன்றைக்காட்டு கிறார் கவி—அவன் கை காட்டுகிறான், அழைப்பு.— அவளுக்குச் சம்மதம், அதை அவள் தன் தோழியின் கடைக்கண் மூலமாமாகத் தெரிவிக்கிறார். புனல் விளையாட்டுப் படலம் 28ம் பாடலில், இந்தத் தடாகத் தபால் முறை விளக்கப்பட்டிருக்கிறது.

பூக்கொய்து புனல் விளையாடி வெப்பம் கொண்டு கை ஜாடைக்குக் கண் ஜாடை காட்டிவிட்டு, வீடு திரும்பினர்—பிறகு....; பிறகா; பீறிட்டுக்கொண்டு வெளிவருகிறது கம்பரசம்.

வெண்ணிலா தன்னொளி பரப்பிற்று; இராமனுடைய தூய மனம் போலவா—தசரதனுடைய வெண் கொற்றக் குடைபோலவா—அல்ல, அல்ல, காமம் மிக்கு ஒழுகிற்று என்ன என்று அறிவிக்கிறார் அரிதாசர் பளிச்செனப் புரியவேண்டும் என்பதற்காக, காமம்

மிக்கு ஒழுகிற்று என்ன என்று கூறியதுடன், கள் வெள்ளம் புரண்டு வருவதுபோல; என்றார்.

வெப்பம் கொண்டு இரு பாலரும் விடுதி திரும்பினர்— அவர்களை நிலவு மகிழ்விக்க வந்தது—அந்த நிலவொளி எங்ஙனமிருந்ததென்றால், காமம் மிகவும் வெளிப்பட்டது போலவும், கள் வெள்ளமாக ஓடியது போலவுமிருந்தது. மதி நிறைந்தது, மதுக்குடம் தெரிகிறது. காமுற்ற இரு பாலரிடம் கட்குவளைகள்! உண்டாட்டுப் படலத்தில் முதற் பாடலே இது; அவர்கள் இனி உண்ணப்போவது என்ன, ஆடப்போவது எவ்விதம் என்பதை எடுத்துக் காட்டுவது போல, இனி அவர்கள் கள்ளைக்குடித்துவிட்டுக்காமக் கூத்தில் ஈடுபடப் போகிறார்கள் என்பதைச் சுட்டிக் காட்டியாகிவிட்டது—முதற்பாட்டிலேயே; அந்தக் கூத்து நடந்து தொலைக்குமட்டும், கவி, வேறு பொருள்பற்றிக் கூறிடலாகாதா; இதை இனியும் காணவல்லேன் அல்லேன்; என்று கூறியபடி மதி எனும் மங்கை நல்லாள் மறைந்திடக் கண்டான், சுடுகிறேன் அவர் தமை என்று சூளுரைத்துமே கதிரவன் எழுந்தான் காணீர்—என்று ஒரே பாடலோடு முடித்திடலாகாதா! நம்மைக் கூறுவர், சரியப்பா! காமச் சுவை இருக்கிறது என்று ஒரு வரியோடு விட்டுத் தொலைக்காமல், துளைத்துத் துளைத்துக் காட்டுவதா — என்று வெட்கத்தால் தாக்குண்டவர்கள். கம்பர் இந்த உண்டாட்டுப் படத்தில் 67 பாடல்கள் பாடி இருக்கிறார்—அவ்வளவும் ரவிவர்மா கை வண்ணத்தோடு வெளிவந்தால், உலக உல்லாசக்கூடக் கண் காட்சியில் முதலிடம் பெறும்! அவ்வளவு 'ரசம்'!!

மகளிர் கள்ளைக்குடிக்கும் போதே, வழி நடந்த களைப்புத் தீரவேண்டும் என்றோ, அலுத்து உறங்க வேண்டும் என்றோ எண்ணவில்லை! பஞ்சை

களன்றோ அவ்வித எண்ணுவர்! இவர்கள் கொஞ்சு மொழிப் பாவையர், எனவே, தங்களை 'யுத்தத்துக்கு'த் தயாரித்துக்கொள்ளவே, குடிக்கிறார்கள்.

குடித்தார்கள், குடித்தார்கள் என்று குறை கூறாதே, அவர்கள் குடித்தது, தேன் அல்லது, மலரும் வாசனைப் பொருள்களும் சேர்ந்த சுவைமிகு பானம்—கள் அல்ல!—என்று வாதாடிப் பார்க்கிறார்கள், சிலர்.

"பைத்தியக்காரி! இது ஏதோ உடலுக்குக் கெடுதல் என்று எண்ணுகிறாள்! இது அவ்வளவும்! பிளட் (Blood) டானிக்!"

என்று, 'இழந்த காதல்' நாடகத்தில் ஒரு கட்டம் வரும். அது போலச் சிலர், அயோத்தி அணங்குகள் போதை சாப்பிடவில்லை என்று கூறுவர்! உள்ளதை மறைக்க வெகு பாடுபாடுகிறார்கள்!!

கண் சிவக்கிறது, நிலை தடுமாறுகிறது, ஒரு பொருள் மற்றொன்றாகத் தெரிகிறது, எதிரில் இருப்பது இன்னது என்று தெரியவில்லை, பாத்திரத்தில் பானம் இருப்பதும் தீர்ந்து போனதும் புரியவில்லை, நிலவுக்கும் கள்ளுக்கும் மாறுபாடு, தெரியவில்லை, நிமிர்ந்துபார்க்க முடியவில்லை, நாக்குக் குழறுகிறது, வார்த்தைகள் பொருளற்று உருள்கின்றன, காரணமற்றுச் சிரிப்பு, கைகொட்டி ஆடுவது —இது தேன் உண்டதின் இலட்சணமா!!

இவ்வளவு வருகிறது, கம்பர் கவிதையில் தெளிவாக, உண்டாட்டுப் படலத்தில்.

மலரணை! மலர் சூடிய மங்கையர்! மதுக்குடம்! இப்படித்தான் ஆரம்பமாகிறது; உண்டாட்டுப் படலம் ஆறும் பாடல். கலவிப்போரில் நாம் தோற்றுவிடக்கூடாது, களித்திட வேண்டும் என்றகருத்துடனேயே பருகுகிறார்கள்—பஞ்சை பராரிகள் அல்ல, எனவே புளித்துப்போன கள்ளை மண் பாண்டத்தில் வார்த்

துக் குடிக்கவில்லை—பொற்கிண்ணத்தில் புதிய மதுவை ஊற்றிக் குடிக்கிறார்கள். உண்டகள், காமத்தை மூட்டுகிறது! கவிதை 9! ஓம குண்டத்திலே நெய்யை ஊற்றினதும் தீ மேலே எழுவதுபோல, உள்ளே மது சென்றதும், மூண்டுகிடந்த காமம் மேலே எழுகிறது,

**வெம் காமம் கனலினை**
**கனற்றிக் காட்டிற்று!**

சாதாரணக்குடி அல்ல! பட்டதும், வெடித்தெழுகிறது காமம்! இராமபாணத்தின் சிறப்பைப் பிறகு பாடலாம், இப்போது இந்த ரசபானத்தின் சிறப்பைக்கூறி முடிப்போம், என்று கம்பர், விரிவாகவே, அதனால் ஏற்பட்ட சேட்டைகளைக் கூறுகிறார்.

மதுவிலே தெரியும் உருவு கண்டு, அதனைத் தோழி என்று எண்ணுகிறாள் ஒருவள், மதுவிலே தன்முகம் தெரிகிறது, போதை ஏறிய நிலையில் இருப்பதால் வேறுயாரோ ஒருத்தி தன்னிடம் உள்ள மதுவைப்பருக வருகிறாள் என்று எண்ணிக் கொள்கிறாள் இவள், குவளையில் ஒன்றுமில்லை, நிலவொளி அதிலே வீசுகிறது, அதைக் கள் என்று எண்ணிக்கொண்டு குடிக்க முயல்கிறாள், இன்னொருவள், ஒருவள் வள்ளலாகிவிடுகிறாள். வானத்து நிலவு வட்டிலில் தெரிகிறது, வா! வா! வந்து நீயும் கொஞ்சம் பருகு அஞ்சாதே வா! என்றே அழைக்கிறாள், ஒருவள் எங்கே அந்த மனுஷன்! நேரம் நினைப்புத் தெரியாத ஆசாமி! "போடி! அழைத்து வா ஓடு!" —என்று தூது அனுப்புகிறாள், ஒருவள் பஞ்சணையில் படுத்திருந்ததன் பதியைப் பாதத்தால் உதைத்து, பதைப்புறு காதல் கொள்ளும்படி செய்கிறாள், மன்மதனே களிப்படைகிறானும், அவர்தம் சொல்லைக் கேட்டும், செயலைக்கண்டும்!!

குளித்தது கூடியது போலவே இருந்தது என்று கூறினது போலவே, குடித்ததும் கலவி போன்றே இன்பமளித்தது என்றார்! எதுகை மோனை மட்டுமல்ல, எல்லா ரசபாவங்களும் அனுபவ பூர்வமாகத்தெரிந்திருக்க வேண்டும், அல்லது அத்தகைய சுகானுபவத்தைப் பெற்றவர்களின் தோழமை இருந்திருக்க வேண்டும், இவ்விதம் கவிதை இயற்ற; சும்மாவராது!

இலவு இதழ்—இலவம் பூ போன்ற அதரம்

துவர்விட—செந்நிறம் நீங்கவும்

எயிறு தேன்வர—பற்களிலிருந்து தேன் போன்ற நீர் வெளி வரவும்

முலைமிசைகக்கொடு கலை யுமூட்டற—மேலிடத்திலே இருந்தகச்சும், மறை விட ஆடையும் முடிச்சு அவிழ்ந்துவிட

அலைகுழல் சோர்தர—அலையும் கூந்தல் அவிழ்ந்து தொங்க

அசதி ஆடலரன்—பரிகாசச் சிரிப்புப் பிறப்பதால்

கொழுதர் செய்கலவியும் கள்ளும் ஒத்த–கணவர் செய்கின்ற கலவியும் கள்ளும் ஒத்து இருந்தன

செய்யுள் 24

தோடவிழ் கூந்தலாள், அல்குலில் பரந்த மேகலை பற்றி இழுத்திடும் ஆடவர், உதிரும் மணிகள், உளறும் வாய்கள், சிவந்தகண்கள், உகுத்த கண்ணீர், உருண்ட குவளைகள்—எல்லாம், அரபி தேசப் பாதுஷாக்கள் ஆயிரம் அழகிகளுடன் கொஞ்சி விளையாடிய கோலாகலக் காட்சி பற்றிக் கூறப்படும் கதையையும் மிஞ்சும் விதமாகச் சித்தரிக்கப் பட்டுள்ளன.

பதைத்தவள் பாதத்தால் உதைப்பதும், பல வகையான முறைகளறிந்த ஆடவர் போரில் ஈடுபடு

வதும், பால் வண்ண நிலவும், பளிங்குக் கிண்ணத்து வார்த்த பசு நறுந்தேறலும், தந்த வரப்பிரசாதம்!

மிகமிக அந்தரங்கமான விவகாரத்தையும் அவர் விடுவதாக இல்லை.

நறை கமழலங்கள் மாலை நளிர்
நறுங்குஞ்சி மாந்தர்
துறையறிகலவிச் செய்வித் தோகையர்
தூசு வீசு
நிறையகல் அல்குல் புல்குங்
கலைபழித் தகல நீத்தா
ரறைபறை யனைய நீராரரு
மறைக்காவரோ தான்,

நறைகமழ்—தேன்மணம் வீசும்

அலங்கல் மாலை—அசையும் மாலை

நளிர்நறு குஞ்சி மாந்தர்—சூடிய நறிய குடுமியை உடைய ஆடவர்கள்

துறை அறி—கலவிக் கரணமறிந்த

கலவிச் செய்வி தோகையர்—புணர்ச்சிக்குரிய பக்குவமுடைய பெண்களின்

தூசு விசி—ஆடைகளை எடுத்தெறிந்துவிட்டு

கலவித்துறையிலே கைதேர்ந்த காரிகையர்—பக்குவமிக்க பாவையர், அவர்களை நெருங்கிய மலர் சூடிய ஆடவர், ஆடைகளைக் களைந்து எறிந்து விடுகிறார்கள்.

போதுமே! மற்றது புரிந்து கொள்ளலாமே, என்பீர்கள், அவர் விடுவதாக இல்லை!

நிலை அகல் அல்குல்—நிறைந்து அகன்ற மறைவிடத்தை

புல்குங்கலை பழித்து—நெருங்கிச் சூழ்ந்திருந்த மேகலாபரணத்தை வெறுத்து

நீத்தார்—வீசி எறிந்தார்கள்

இவ்விதமெல்லாமா செய்வது, என்று அனுபவமற்றவர்கள், ரசமறியாதார் கேட்டால் என்ன செய்வது என்று எண்ணிய கவிச்சக்கரவர்த்தி, அந்த ஆடவன் செய்தது முற்றிலும் சரியான காரியம், நடைபெறப் போவதோ பரம இரகசியமான காரியம், மேகலாபரணம் இருந்தால், ஒலி கிளம்பும், விவகாரம் வெளியாருக்குத் தெரிந்துவிடுமே, அதனுல்தான் அல்குல் சூழ் மேகலையை அறுத்து எறிந்தான், என்றும் கூறுகிருர்கள்— அதற்கு ஒரு உவமைகூட அருளுகிருர்! பறைபோல் ஒலிக்கும் தன்மையுடையவர்களை, பரம இரகசியம் நிகழ்ந்திடும் இடத்தில் இருந்திட அனுமதிக்கக் கூடாதல்லவா, என்று கேட்கிருர்.

அறைபறை அனைய நீரார்
அருமறைக்கு ஆவரோதான்

—எனும் கவிதா வாக்கியம் காண்க,

நல்ல வாய்ப்பு, இதை இழந்துவிட்டோமே— கலவிப்போரின் போது, மேகலை ஆட, அதன் ஒலி கேட்கும்போது, அலாதியானதோர் இன்பமல்லவா கிடைக்கும்; நாம் இங்கு, அறுத்து எறிந்து விட்டனர் மேகலாபரணத்தை என்று கூறிவிட்டோம்! என்ன காரியம் செய்துவிட்டோம். பெருந்தவறு, மிகப் பெருந்தவறு என்று கம்பர் கவலைகொண்டுவிட்டார் என்று தெரிகிறது. அதனுல்தானே என்னவோ, கலவிப்போர் ஒலியையே கூட ஒரு கவிதையில் காட்டிவிட்டார்–துணிந்து–ஆயாசத்தின் உச்சிமேல் ஏறி நின்றுகொண்டு.

தசரதன் தன் பரிவாரம் புடை சூழ மிதிலையில் நடைபெற இருக்கும் சீதா கலியாண வைபத்தைக் காணக் கானிடை செல்லும்போது நடைபெற்ற லீலா விநோதங்கள்தாமே இவை.

கம்பர், கானிடை கிளம்பிய பலவகை ஒலிகளைத்

தெரிவிக்கிருர்—எந்தக் கவிஞனும் தெரிவிக்கக் கூசும் ஒலி உட்பட!!

புதுக்கொண்ட வேழம்பிணைப்போர் புனைபாடலோதை
—புதிதாகப் பிடித்துக்கொண்டு வந்த யானைகளைக் கட்டுகிறவர்கள் அமைத்த பாடலின் ஓசை
மதுக்கொண்ட மாந்தர் மடவாரின் மிழற்று மோதை
—குடித்துவிட்ட ஆடவர் மடவாரிடம் பேசும் வெறிப்பேச்சின் ஓசை
பொதுப் பெண்டி ரல்குற்புனை மேகலைப்பூசலோதை
—பொதுப் பெண்டிர்களின் கலவிப்போரின் போது எழும் மேகலாபரணத்தின் ஓசை
கதக்கொண்ட யானை களியாற் கனிக்கின்ற வோதை
—மதம் பிடித்த யானைகள் களிப்பால் (பிளிருகின்ற) இடுகின்ற ஓசை!!

இவை சூழ்ந்தன, என்கிருர் கவி. காமச் சுவையைக் கண்டபடி கூட்டிவிட்டுக், கம்பரசத்தைக் கொண்ட மட்டும் பருகிவிட்டு.

ரகுபதி ராகவ ராஜாராம்
பதீத பாவன சீதாராம்

என்று பாடித், தாளம் கொட்டினல், ஜென்ம சாபல்யம் ஆகும், என்றும் நம்புகிருர்கள். வெப்பம் மிகும்—வேறு கவிதைகளையும் மேலும் மேலும் விளக்கிக்கொண்டே போனல் என்று அஞ்சி, மேகலாபரணம் கலவிப் போரினல் ஓசையைக் கிளப்புவதைக் கூறுமளவுக்குச் செல்லத் துணிந்த தூயவரிடம், நாம் 'இராமரசம்' எதிர்ப்பார்த்தால் ஏமாற்றமடைய வேண்டியதுதான், அவர் காவியம் இயற்றியது 'கம்பரசம்' அளிக்க-என்பதை அறிந்து, "இராமா! உன் கதை இப்படிக் கரைபட்டுப் போகலாமா!" என்று கூறி முடிக்கிறோம்.

—

